கருத்துகளுக்கு நாடக வடிவம் அளிப்பதும், இவருடைய ஓரங்கக் கலையின் எல்லாவற்றிலும் பெரிய சாதனையாகும்.

இவருடைய ஓரங்கத் தொகுதிகள் : 'விடிவெள்ளி', 'ஓ என் கனவுகளே'.

இத் தொகுதியிலுள்ள ஓரங்கம் 'கைதி', பாவனை, ஆதரிசத்தின் மண்ணகத்துமீது அமைக்கப்பட்டுள்ளது. இதில் ஓரங்க ஆசிரியர் மனிதனின் உயர்ந்த தேட்டங்களை மிக இயற்கையான முறையில் சுட்டிக் காட்டியுள்ளார்.

## டா. லட்சுமிநாராயண் லால்

இவர் தொடக்கத்திலிருந்தே நாடகத்தைக் காட்டிலும் நாடக மேடையின் முழுக்கற்பனையாலும் ஊக்கப்பட்டு வந்துள்ளார். அவருக்கு முன்னல் நிச்சயமானதும் பரம்பரையாக இருப்பதுமான நாடக மேடை இல்லாதிருக்கலாம். ஆனல், நாடகத்தின் மேடை தொடர்பான இந்த முழுமையான நோக்கும் கற்பனையும் அவ்ரை எப்போதும் வசீகரித்து வந்துள்ளன. ஒருபுறம் இன்றைய சமூக வாழ்க்கையின் உண்மையான பிரச்னைகளை விரிவான, நுட்பமான அளவில் ஏற்றுக்கொண்டுள்ள இவர், மறுபுறம் தம்முடைய ஒவ்வொரு ஓரங்கத்திலும் நாடக மேடையைப் பிரத்யட்சமானதாகவும் அடையக்கூடியதாகவும் ஆக்க வெற்றிகர மாய் முயற்சி செய்துள்ளார்.

இக்கால நாடகமேடை ஆராய்ச்சி, அதனுடைய விதவிதமான உருவங்களின் பின்னணியில், இவருடைய பெயர் ஹிந்தி ஓரங்கத்தில் பெரிதும் சிறப்புடையதாகும்.

இவருடைய ஓரங்கத் தொகுதிகள் : 'தாஜ்மகலின் கண்ணீர்', 'மலைக்குப் பின்னல்', 'பல வண்ண நாடகங்கள்', 'பல வடிவ நாடகங்கள்' ஆகியவை. 'காபி ஹவுஸில் எதிர்பார்த்தல்' புதிய நாடகம். நாடக மேடை நோக்கில் ஒரு சக்திவாய்ந்த படைப்பு. இத் தொகுதியிலுள்ள எல்லா ஓரங்கங்களிலும் தனியானது, சிறப்பானது.

'கண்ணுடி', 'மாசுடையாள்', 'சூரிய முகம்', 'மிஸ்டர் அபிமன்யூ', 'கர்ஃப்யூ' ஆகியவை இவருடைய பிரபலமான ஹிந்தி நாடகங்கள்.

## தர்மவீர் பாரதி

புதிய தலைமுறையின் படைப்பாளர்களில் மிகவும் குறிப்பிடத்தக்க ஒரு பெயர் தர்மவீர் பாரதியினுடையதாகும். இதுவரை மொத்தம் எட்டு, பத்து ஓரங்கங்களே எழுதியிருப்பார். ஆனால், ஒவ்வொரு ஓரங்கத்தில் அவருடைய தனித்தன்மையையும், நாடக ஆட்சியையும் காணலாம். 'ஆறு தாகமாயிருந்தது'—பாரதியின் முதல் ஓரங்கத் தொகுதி.

'சிருஷ்டியின் இறுதி மனிதன்'—சந்த நாடகம். நாடக மரபும் கலையும் முழுமையாக இதில் வெளியாகியுள்ளன. தொனி, குரல், ஒலி—இவற்றின் வாயிலாக மனிதனின் ஒரு நியதிக் கதை இங்கு உருவாக்கப்பட்டுள்ளது.

பாரதியின் 'குருட்டு யுகம்' என்னும் பிரபல நாடகம் ஹிந்தி நாடக மேடைக்கு ஒரு நன்கொடை.

## சந்திரகுப்த வித்தியாலங்கார்

இவர் 1906, டிசம்பர் 4ஆம் நாள் பிறந்தார். இவருடைய படிப்பு குருகுல விசுவ வித்தியாலயத்தில் நடந்தது. தொடக்கத்திலிருந்தே இவருக்குக் கல்விப் பயிற்சியிலும் சுதந்திர எழுத்திலும் ஈடுபாடு இருந்தது. அப்பால் ஆசிரியப் பணியில் இவருடைய ஆர்வம் சென்றது. 1931 முதல் 1947 வரை லாகூர் விசுவ சாஹித்ய கிரந்த மாலாவில் ஆசிரியராகவும் நிர்வாகியாகவும் இருந்தார்; இந்த வெளியீட்டகத்திலிருந்து உலக, இந்திய இலக்கியத்தின் சுமார் நூறு புத்தகங்கள் வெளியாயின. ஆசிரியர் என்னும் முறையில் இவருடைய புகழ் மேலும் வளர்ந்தது. லாகூரின் 'தைனிக் ஜன்மபூமி', தில்லியின் 'ஆஜ்கல்', 'விசுவ தர்சன்', பம்பாயின் பிரபலக் கதைப் பத்திரிகை 'ஸாரிகா' ஆகியவற்றில் ஆசிரியப் பணியாற்றினார்.

இவர் கதாசிரியர், நாடகாசிரியர் என்ற முறையிலும் புகழ் பெற்றவரே. சிறுகதைத் தொகுதிகளில் 'மூன்று நாட்கள்', 'வாபஸீ', 'முதல் ஆஸ்திகன்', 'ஆழ்ந்த இருளில்' ஆகியவை குறிப்பிடத் தகுந்தவை. நாடகங்களில் 'அசோகன்', 'ரேவா', 'தேவனும் மானிடனும்', 'நியாயத்தின் இரவு' ஆகியவைபற்றி விவாதம் நடந்துள்ளது. 'ஹிந்துஸ்தானம் சென்று சொல்லுங்கள்'—இவருடைய குறிப்பிடத்தக்க ஓரங்கத் தொகுதி.